உ

மூத்தபிள்ளையார் துணை.

# சொற்பொழிவாற்றுப்படை

என்னும்,

(பிரசங்கவிதி)

இஃது,

திருநெல்வேலி,

S. பால்வண்ண முதலியாரவர்களால்

இயற்றி,

மதுரை நான்காந்தமிழ்ச்சங்கத்து
எட்டாவதாண்டு நிறைவின் விழாக்
கொண்டாட்டத்தன்று வீற்றிருந்த
புலவர் அவை
ஏற்றஞ்செய்யப் பெற்றது.



முதற்பதிப்பு,
500.

திருநெல்வேலி
...ல் இஸ்லாம் பிரஸில்,
...பிக்கப் பெற்றது.
1911



இதன்விலை—அணா 4

உ

மூத்தபிள்ளையார் துணை.

# சொற்பொழிவாற்றுப்படை

என்னும்,

(பிரசங்கவிதி.)

இஃது,

திருநெல்வேலி,

S. பால்வண்ண முதலியாரவர்களால்

இயற்றி,

மதுரை நான்காந் தமிழ்ச் சங்கத்து

எட்டாவதாண்டு நிறைவின்விழாக்

கொண்டாட்டத்தன்று வீற்றிருந்த

புலவர் அவை

ஏற்றஞ்செய்யப் பெற்றது.

முதற்பதிப்பு.

500.

திருநெல்வேலி

நூருல் இஸ்லாம் பிரஸில்,

பதிப்பிக்கப் பெற்றது.

1911.



இதன்விலை—அணா 4.

உ

முத்தபிள்ளையார் துணை.

## "நூல் வரலாறு."

உலகத்துள் இறைவனாலருளிச்செய்யப்பெற்ற மொழிகள் பலவற்றுள் வடமொழியுந் தென்மொழியு மிக மேலானவைகளாம். தென்மொழி மெல்லிய ஓசையும் இனிமையும் பொருந்தி நிலவுவதாம். அம்மொழிப்புலவருள் பெரும்பாலார் செய்யுளியற்றுவதையே தமக்கோர் அணிகலனாக் கொண்டாரேயன்றி வழக்கியல் நூல்கள் செய்யா தொழிந்தனர். ஆயினும், செய்யுட்களுக்கு உரை எழுதுவதினும் பழய வாலாற்றுப்பாக்களை எடுத்துக்கொண்டு அவைகளின் பொருள்களை அவைக்கண் அகல உரைப்பதினும் மிகத்தேர்ச்சியுற்றவர்களா யிருந்தனரென்பது சொல்லாமலே யமையும். இஃது இங்ஙனமாக பாக்களுக்குரைசெய்யவேண்டாது யாதாமொரு பொருளின் தன்மைகளைப்பற்றி ஓரவைக்களத்துப் பேசக்கேட்கில் அப்புலவர்கள் பெரிதும் பின்னடைகின்றனர். அது அவர் அம்முறை பயிலாக்குறைவினாலென்க.

மேல்நாட்டுப்புலவர்கள் இப்பேச்சு முறை பயிலுதற்குப் பற்பல கழகங்கள் ஆங்காங்கமைத்துப் பயின்று, பேசுமாறு கொடுத்ததோர் இயலினை யாவருங் களிக்கும் வண்ணம் குறித்த நேரவரையறையுள் நன்குபேசி முடிக்கின்றனர். இச்செந்தமிழ் நாட்டினும் அவ்வகைக் கழகங்கள் ஏற்படின் பேச்சில் வல்லுனராவதற்குள்ள ஐயம் யாதேனும் ஒன்றுமின்றாம். இது நிற்க, தமிழ் நிலத்துட் பேச்சுமாற்றலடைவான் கருதி பற்பலபுலவர்கள் இப்பொழுது மிகமுயலுகின்றனர். ஆனால் அவர்கள் அப்பேச்சிற்குரிய நூன்முறைகாணாக் தன்மையாற் பெரிதும் பிழைபடுகின்றனர் என்பது கண்கூடாம். தமியேன் பற்பல அவைக்களத்துட் சென்று பேசும்போதும் பேசுவோர் பேச்சைக் கேட்கும்போதும் பேச்சுமுறை நூல் ஒன்றிலதேயெனக் கவலா நிற்பேன். யாரேனும் அக்குறைவினை நீக்கித் தாராராவென்று இதுகாறும் எதிர்பார்த்து நின்றும் பயனின்றிப் போயினமை கண்டு பதினொரு இயல்களையுடைய "சொற்பொழி வாற்றுப்படை" என்னும் இச்சின்னூல் வழக்கின் முறையால் வழுத்துவா னுயினேன். இஃது வரையுங்கால் இந்நூன் முழுவதும் தமிழ் மொழியாலேயே எழுதப்படவேண்டுமென்னுமெண்ணம் என்பாலுந்த ஒருவாறு அவ்வாறே

எழுதி முடித்தேன். தமிழ் அருஞ்சொற்களுக்கு, பெரும்பாலும் நேரான வடமொழிச் சொற்கள் காட்டும் அட்டவணை ஒன்றும் இத்துடன் சேர்த்துள்ளேன்.

விரைவிற்பற்றிய இந்நூலுள் அறிஞர்களாற் பற்பல குற்றங்கள் பாக்கக் காணக்கூடும். அவ்வாறு காணின் அதனைப்பாராட்டாது குற்றநீக்கித் தமியேனைக் கோதாட்டுவாரென்று நம்புகிறேன்.

இங்ஙனம்,

S. பால்வண்ணமுதலியார்,

திருநெல்வேலி.

உ

# பொருளடக்கம்.

# INTRODUCTION.

THIS brochure is a Guide to the Art of Public Speaking and meets a sadly-felt want. In these days of Conferences, Sangams, and Sabahs, in which much work has to be turned out in a few days, our Pandits and Navalars very often disappoint their audience by trespassing on the time appointed for the other speakers; and should they learn the value of time and the art of speaking effectively and to the point, they would not be such great sinners as they are. Even university men often err egregiously on this score, and their

protracted lectures often pall on the auditory in their eagerness to speak long and pour out their hearts. In these circumstances a careful perusal of the *eleven* sections of this treatise in Tamil will, it is hoped, go a long way to stamp out these irregular and objectionable practices and to foster business habits and promote relevant talk in such as are tongue-doughty.

The *first* section is about speech in general; the *second* deals with the practice of speech-making; the *third* treats of how to speak; the *fourth* tells us about the qualifications of a good speaker; the *fifth* relates the fourfold object of speaking; the *sixth* describes the characteristics of a good audience; the *seventh* sets forth the effects of an eloquent speech; the *eighth* fixes the time-limit for a speaker; the *ninth* points on the difference between a lecture and a debate and the length of time that a lecturer and a debater will be allowed to take up; the *tenth* prescribes

the duties or states the functions of a Chairman or President; and the *eleventh* gives a miscellany of minutiæ about the speaker's position and posture, about the lecture-hall and its illumination and ventilation, and about the behaviour of the President and the assembly respectively. A glossary of difficult words and their meanings brings the tiny volume to a close.

This new venture adds to the author's reputation as a Tamil scholar, and demonstrates how a tincture of English education rationalises our encyclopædic pandits and sets them to work for the good of their coterie. Mr. Palvanna Mudaliar, whose *Siddhanta Jnana Ratnavali* and *Saiva Catechism* have given his readers a taste of his religious and metaphysical erudition, and who is now tracing the history of Tamil words and piecing together the current traditions about the ancient local celebrities for weaving out a connected story of the illustrious ancestors

of the historic houses in this district, is an earnest and assiduous student of Tamil literature, and a professor of varied learning and deserves the encouragement of appreciating Macænas, who alas ! are a few in this iron age and fewer still in this corner of the Indian continent. This deplorable lack of appreciative opulence will, I hope and trust, be amply made up by the reading public who have not hitherto grudged to send for his publications and whose honest and just estimate of his labours has prompted him to put his heart and soul into this new venture and to enter 'fresh fields and pastures new' for the sake of the Tamilian race.

**M. S. Purnalingam Pillai, B.A.,L.T.,**
*Camisis College, Tinnevelly.*

உ

ஸ்ரீ ஆதிபிள்ளையார் துணை.

# சிறப்புப்பாயிரம்.

---

மேலகரம் திருவன்,

சுப்பிரமணியக்கவிராயரவர்கள்,

இயற்றிய சாற்றுப்பாக்கள்.

கூடனகர் நான்காந் தமிழ்ச்சங்கங் கூட்டியசீர்த்
தோடுறுதார்ப் பாண்டித் துரைமன்ன-னீடியபா
வல்லா ரொடுமவையின் மாட்சியுறப் பேசியனூல்
சொல்லா பெனவேண்டச் சூழ்ந்து.

(றினைற்
சொற்பொழிவாற் றுப்படைநூல் சொற்றவையி லேற்
பொற்புறுபால் வண்ணப் புலமையோ—னற்புவியை
யாயிரத்துப் பதினொன் றுங்கலியாண் டிற்சங்க
வாயிருமெட் டாம்விழவில் வந்து.

உ

மூத்தபிள்ளையார் துணை.

# சொற்பொழிவாற்றுப்படை.

## காப்பு.

குறள்வெண்பா.

நல்லானைக் கன்றினருள் நண்ணவே நூலறிவுங்
கல்லாதே வந்தெய்துங் காண்.

## இறைவன் வணக்கம்.

ஆசிரியப்பா.

"மலைமகள் கொழுநன் மலரடி வழுத்துவல்
புலமுறு செஞ்சொற் பொழிவுக்
காற்றுப்படைப் பா னறைதரற் பொருட்டே"

## நூல்.

### 1. பொதுவியல்.

உலகின் கண்ணுள்ள எல்லாப் பிறவிகளினும் மக்கட் பிறப்பே மிக மேலானதாம். அட்

பிறவிக்குரிய யாக்கை வியப்பினை விளைவிக்கும் பொறிபோல்வதொன்றாம். அது புறவுடல், உள்ளுடல், முதலுடல் என முத்திறப்பட்டு நிற்கும். அஃது தனது முதலிடத்தினின்றுந் தோன்றி இருந்து ஒடுங்கும். அஃது முதனிலை முதலிய குழிகளையும், உதிரப்பைகளையும், உடன்முப்பிணி நீர்களையும், உந்திக்கால் முதலிய காற்றுக்களையும், நரம்பு முதலிய நாணிகளையும் உடைத்தாயிருத்தலால் ஓர் வியன்பொறியாயிற்று.

இவ்வுடல் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளையுடையது. இப்பொறிகள் ஐம்புலனுக்கிருப்பிடங்களாம். அவ்வுடல் வலியுற்று நன்னிலையுறில் அப்பொறி புலன்களும் அந்நிலை பெறும். ஆதலால் இவ்வுடல் வலியெய்துமாறு மெய்ம்முயற்சி மிகவேண்டற் பாலதாம். அவ்வலி நினைப்புக்கருவிக்கு ஊற்றாகிநிற்கும்.

உடலும் குளிர்ச்சி வெம்மைக்குத்தக்கவாறு மாறுதலடைதல் ஒருதலை. ஆதலால் இவ்விரு தன்மையும் ஒத்தவிடத்தில் உறைதல் தகுதியாம். ஒரே ஊரிலேயே இத்தன்மைகள் நிகழ்தற்கிடனுண்டு.

அவ்வுடம்பிற்கு வேறாய் ஊழ்வலியால் அதனுட் சிறைப்பட்டு நின்று கருவிகளை இயக்கும்

அறிவே உயிராம். அவ்வறிவு நசை, செயல் என்னும் இருதிறப்பட்ட ஆற்றல்களைத் தன் மாட்டுடையதாம். இவ்வுயிர் உடலோடு யாக்கப்படாவிடில், தானொருபொருளென்றறியாதாம். கண்ணுக்கு விளக்குப்போல உடலுயிர்க்காம். உயிரறிவு என்னும் யாறு ஐம்பொறிகளென்னுங் கால்கள் வழித்தாய் வெளிச்செல்லும். அங்ஙனம் செல்லாது அதனை நினைப்புக் கருவியின் நிலைக்களத்தில் ஒருங்கு நிறுத்தினார் நிறுத்தலார்.

அவ்வுயிர்க்கு ஒருபொருளின் அறிவானது அப்பொருளின் பெயரை உணர்த்தும் ஒலியானுண்டாம். ஈண்டு ஒலி என்றது ஐம்பெரும் நிலையியற்பொருள்களுள் வானத்தை இடனாகக் கொண்டு நிகழும் ஓசையின் தொழிலையன்று. மற்றென்னைவெனில், ஒலிமுதல் வழியினின்றெழுந்த சொல்லொலியையாமென்க.

அவ்வொலி முதனிலையொலி, மார்போலி, கழுத்தொலி, வாயொலி என நான்கு திறனுறாம், முதனிலைக் களத்தில் அறிவாற்றலை மாத்திரம் பற்றி நிற்கும் ஒலி முதனிலையொலி. மார்பில் பயின்முட்டையுள் ஐந்து நிறமென்ன, எழுத்து நுவின்றிப் பொதுப்பொருள் தாங்கி நிற்கும்

ஒலி மார்பொலி; இவ்வொலி ஆயுங்கருவியை அணையுங்கால் உலவித வேறு பாட்டினையுடைய எழுத்தொலியுண்டாம். பின்னுயிர்ப்புக்காலினை மிஞ்சி அவ்வெழுத்தொலி. தொடர்மொழிக்குரிய சொல்லாய்ச்சமுத்தில் நிற்குங்கால் சமுக்தொலியாம். பிறர் செவிப்புலனாவதும் அவருக்கு உதவி புரிவதாயுமுள்ள சொல்லொலியே வாயொலியாம்.

உயிர்ப்புக்கால் நிற்குநிலையிற் பிரிந்த பக்திப் பாகுடைக்கால்களுள் ஒன்றாகிய உந்திக்காலின் தரிப்பினால் நாமுதலியகருவிகள்தொழிற்பட்டு நிற்றலாற் போந்த அவ்வாய்ச்சொல்லொலி யாண்டுஞ் செறிந்துள்ள வானினைத் தாக்கா நிற்கும். அவ்வாறே கேட்போர் செவிப்புலனறிவிற்றொடக்குறும். பின் உட்கருவிக் களத்துட்பொருந்தும்.

அவ்வுட்கருவிகள் நினைப்புக்கருவி, ஆயுங்கருவி, முடிக்குங்கருவி, எழுப்புங்கருவி, என நாற்பாலனவாம்.

முற்கூறிய உயிர்ப்புக்கால்முதனிலைக்களத்திற்றோன்றி உச்சியளவுஞ்சென்று மூக்குவழியாய் ஆறிரண்டுவிரற்கடை புறப்பட்டு, நான்கு விரற்கடை வெளியிற்பாழ்போக எட்டு விரற்

கடை மீண்டுந் தோன்றினவிடத்தி லொடுங்கும். இவ்வுயிர்ப்புக்காலின் இயக்கத்தாற்றான் நினைப்புக்கருவி நினைக்கும். ஆயுங்கருவி ஆயும் உல்லுழி அவை அடங்கி நிற்கும். இவ்வுயிர்ப்புக் காலின் புடைபெயர்ச்சியாலுநாம் ஆராய்ச்சியைப் புரிதலை எண்ணார்கடனும். எண்ணின் சார்பின்றிப் போக்கபாவுங் கொள்ளப்படாவாம். ஏனெனில் இவ்வெண்ணினாற்றான் உண்மையறிதல்கூடும். கருதலளவையைத் தனக்கு நிலைக்களமாய்க்கொண்ட இவ்வெண்ணூற் பயிற்சி மிக வேண்டற்பாலதாம். அஃது ஆய்ந்தளாவந்தாறும் அறிவினை யளிக்கும். பேசுதற்கு எடுத்துக் கொண்ட பொருட்குரிய வழிகளை அது நிலை நாட்டா நிற்கும்.

இவ்வேரணப்புலமையை, பல்பொருள்களி னறிவிற் பொருந்தி அவைகளின் கண்ணுள்ள பலவேறு ஆற்றல்களையும் ஒரவைக்கண்ணுள் ளார் தெளியுமாறு தன்கோள் நிறுவித் தொடர்மொழி முடிவுகளால் ஓருதியிட்டுச் சொன்மாரி யாய்ப் பொழிதற்கு வழிப்படுத்தலாகிய முறைமைகளை இந்நூலெடுத்து மொழிதலால் இதற்குச் “சொற்பொழி வாற்றுப்படை” என்னும் பெயர் புனைந்துரைக்கப்பட்டது. இச்சொற்பொழி

வும் உணர்வின்பாற்படும் முறைமைப்பாட்டினையுடையதாம். அம்முறைமையினை இளமையிற் கற்றுச் சொல்வன்மை கொண்டு மொழிவரேல் பொன்மலர் நாற்றமுடைத்தாதல் போலாம். இதனைப்புன்முறை பயிறலால் நுண்ணறிவுற்றசொல்லாற்றலில் முழுநிலை வந்தெய்துவர். சிலருக்கு இவ்வாற்றல் இயற்கையி லமைந்துள்ளதாம்.

இச்சொற்பொழிவு புரிதற்குக் கல்வியே இன்றியமையாத கருவியாம். நூல்கள் பலவுளவாகலால் ஆராய்ந்து அமைவுடையவைகளைக்கற்க வேண்டும். கல்வியில்லாது அவைக்கண் பேசவருதல் ஊமைவாய் அங்காத்தலாய் முடியும். கல்வி கற்கினும் அதனை உய்த்துணர்தல் வேண்டும். உய்த்துணர்ந்துஞ்சொல்வன்மைஇன்றெனின்என்னாம்.

அக்கல்வி யாண்டும் சிற்றுயிர்க் குற்றதுணையாதலால் மேற்கோள் நூல், ஒழுங்கியனூல், அளவைநூல், புலமை நூல், வரலாற்றினூல் முதலியவைகளைச் சார்ந்துணையுங் கற்றல்வேண்டும். அங்ஙனங் கற்றகல்வியை மறவி என்னுங் கள்ளனுக்கு உடையதாக்காமற் காப்பாற்றல் வேண்டும். வருந்திக்கற்றவற்றை நினைவினுள் வையாமல் வேறுங்கற்க முயறல் கையின் கண்ணுள்ள அருமைப்பொருளைநீரினுட்கொட்டிப்பின் வேறு

பொருள்தேட அரிப்பரித்து ஆங்குளய்த்து நிற்றலையொக்கும்.

நினைப்பாற்றலைப் பலவித உழைப்பினால் வளர்த்தல் வேண்டும். அவை,

(1) மனத்திற் பொறிக்கப்பட்ட யாதாமொரு பொருளை நுண்ணிய அறிவோடு உய்த்துணர்தல்.

(2) தொகுத்தும், வகுத்தும் முறைவயின்வைத்தல்.

(3) பன்முறை கூறிப்பயிலல்.

(4) வழி வரவு முறையுணர்ந்து கொள்ளல்.

(5) ஒற்றுமைத் திறனறிந்து நிற்றல்.

(6) எழுதிவைத்துணர்ந்து கொள்ளல் முதலியனவாம்.

வைப்பிடை வைத்த பொன்னைப் பிறருக்குப் பயன் படுமாறு எடுத்து வழங்கல்போல நினைப்பினுள் வைத்த பொருளையும் அவ்வாறு பயன் படுத்தல்வேண்டும். ஒவ்வொருவரிடத்தும் ஒலி வேறுபட்டுநிற்றல்போல, சொல்வன்மையும் வேறுபட்டு நிற்குமாதலால் உயர்தரச் சொல்வன்மையுடையார் இபற்றிய நூலினைப் படித்துப்பயில்க. அற்றேல் அவர் வன்மைத் திறனில் ஒரு சிறிதேனும் படிப்போர்க்குரிய தாகாமற் போகாது. அன்றியும் அவ்வன்மைத்

திறன் பேச்சவைக்களந்திற் சென்று பலர் பேசு மாற்றை உணர்தலானுமுறும். அது இனிமை கலந்த மொழித்தொடர்புகளால் அமைந்திருத்தல் நலம்; ஏனெனில் அவ்வினிமைச் சொன்னலம் உரைவழியுறுங் கேட்டினைக் கெடுக்கும். இதுபற்றி "இன்சொலாலன்றி யிருநீர்வியனுலகம், வன்சொலாலென்றுமகிழாதே" என்றார் பெரியோர்.

இதழ், நா, பல், அண்ணம் என்னும் நால்வகை உறுப்புகளின் புடை பெயர்ச்சியாற்போந்த வாயொலிச் சொல் தொடர்மொழிகளாய் வெளியுறிற் பேச்சாம். அதனை உரத்த மொழியில் உரைத்தலாகும். பேசலுக்கும் உரைத்தலுக்கும் வேறுபாடுண்டு. பேச்சு, விரைவு, தெளிவு, நேர்மையுடன் கூடியதாயிருக்கும். உரையோ ஊக்கம், அழுத்தம், விரைவு இவைகளுடன் கூடி நிகழும். பேசுவோன் பொருள்களை விளக்கி நிற்பான். உரைப்போன் அவைகளைச் செய்ய ஏவி நிற்பான். பேச்சு ஒளிபோலவும் உரை அதன் வலிபோலவுமாம்.

முற்கூறிய உடற்பொறியின் கண்ணுள்ள மார்பிடை உயிர்ப்புப்பையின் கீழ் வளைந்த நடுத்தட்டொன்றுளது. அஃது உயிர்ப்புக் காலினை உள்ளே இழுக்குங்கால் வயிற்றுடன் உராஞ்சிநிற்

தும். அக்காற்றை வெளிவிடுங்கால் மேற்சென்று முன்னிலை எய்தும். ஏனெனில் அஃது விரிந்து சுருங்கும் தன்மையை யுடையது. உயிர்த்தல் வயிற்றினின்றும் உயிர்த்தல், நெஞ்சினின்றும் உயிர்த்தல் என்று இருதிறனுறுர். முன்னது வன்மையும், பின்னது மென்மையும் பொருந்தி நிகழும். மிக ஊக்கிச்சொல்லவேண்டுங்கால் வயிற்றுயிர்ப்பையும், மற்றுழி நெஞ்சுயிர்ப்பையுங் கொள்ளல்வேண்டும். வயிற்றுயிர்ப்பில் காற்று மிக ஆழக்கி னின்றும் உந்தி பேறுவதால் மிகுதியாய்ப்புறப்பட்டு வல்லோசை பயப்பிக்கும். அது பற்றி ஒலி நாண்கள் மிகவலிகொண்டு தாக்கப் படும்.

யாழ் முதலிய இசைக்கருவிகட்கு நாண் ஏற்பட்டு இருத்தல்போல், இவ்வுடற் பொறியில் ஒலி நாண்கள் ஏற்பட்டிருக்கின்றன. அந்நாண்களை முறுக்கல் நெகிழ்த்தல்களால் தாழ்ந்தமேல் லோசையை எடுத்தல் படுத்தல் செய்யுமாப் போல், உடப்பின் ஒலி நாண்களில் உயிர்க்கிழவன் ஆளுந்தன்மைக்குத் தக்கவாறு முறுக்கல் முதலியவற்றால் உள்ளொலியினை உயர்த்தவுந் தாழ்த்தவுங் கூடும். இவ்வுடலொலி நாண்கள் வளைந்து நிமிருமியல்புடைய அரும்பினைப் பொருந்தி யிருக்கின்றன. அவைகள் ஒன்றுபோல் ஒலி

ஒலிக்கற்குரியனவைகள். அங்கங்கள் கழுத்தில் ஒலிதங்கும் பையோடு இணைக்கப்பெற்றிருக்கின்றன. அப்பை காற்றாட்டுங்கருவி வாய் வைக்கப்பெற்றுள்ளது. இஃது இன்னதாக, நாம் இயல்பிற்பேசுமொழி, நடுநிலைஒலி. ஊக்கிப்பேசுமொலி, எடுத்தலொலி. தாழ்த்தி பேசுமொலிபடுத்தலொலி. இவ்வெடுத்தல் படுத்தல்களினின்றும் திரும்பி வந்துநிற்கும் நிலை நடுநிலையாதலால் மக்கட்கொடங்குங்கால் இந்நடுநிலை ஒலியிற் பேசவேண்டும் ஏனெனில் அஃது ஒலி நீர்மை தரிப்பதாகும். இவ்வொலியளவும் மிகக்குறைந்த ஒலி குறைந்த ஒலி, நடுநிலை ஒலி, உயர்ந்த ஒலி, மிக வுயர்ந்த ஒலி எனப் பலதிறமுறும். எடுத்தல், படுத்தல்கள் ஒலி வழியின் அதிர்ச்சியளவில் நிகழும். இவ்வதிர்ச்சி முறுச்சுகளில் மிகுந்தும் படுத்தலிற் குறைந்தும் நிலவும்.

இடத்திற்கேற்ப ஒலிகளைத் தெரிந்தெடுப்பதில் மிக்கறிவு செலுத்தவேண்டும். களிப்புறு மொழியினை எடுத்தலொலியினும், துன்புறு மொழியினைப் படுத்தலொலியினும் பேசவேண்டும். அன்றியும் ஒருதொடர்மொழி முடிவின் முதற்பங்கு எடுத்தலாலும், பிற்பங்கு படுத்தலாலும் மொழியப்படவேண்டும்.

உதாரணமாக:—

| (1) எடுத்தல் | படுத்தல் |
| --- | --- |
| நேற்றிரவில் கொற்றன் | நெல்லைக்குப் போயினன். |
| (2) (எ) பொருநையாற்றில் | (ப) மிகுந்த வெள்ளம் வருகின்றது. |

இன்னவின்னதை எடுத்தும் இன்னவின்னதைப் படுத்தும் கூறல்வேண்டுமென்பதை அடியிலுணர்த்துமாற்றானறிக.

| எடுத்தலால் மொழிய வேண்டும் | படுத்தலால் மொழிய வேண்டும். |
| --- | --- |
| 1. தொடர்மொழிமுடிவின் முற்பங்கை | அம்முடிவின் பிற்பங்கை |
| 2. கட்டாயமாய்ச்செய்யவேண்டுமென்பதை | உறுதியாய் அழுத்தவேண்டுமென்பதை |
| 3. இன்னது இப்படி இருந்ததென்பதை | உள்ளபடியைத்தெழும் வேண்டுகோளை |
| 4. களிப்பை | துன்பத்தை |
| 5. வெற்றியை | தோல்வியை. |
| 6 எதிர்த்தலை | பணிதலை. |
| 7. சினத்தை | அமைதியை. |
| 8. வெறுப்பை | விருப்பை. |
| 9. உயர்வை | தாழ்வை. |
| 10. பொய்யை | மெய்யை. |
| 11. கிளர்ச்சியை | வேசாறலை. |

ஈண்டுக்கூறியவைகளைக்கொண்டு கூறாதவற்றையுமுணர்க.

இனி மொழிகளை நன்குசொல்லுக. அல்லாக்கால்கருத்து வேறுபடும். குன்றியபேச்சு,

வாயை நன்குதிறவாமை, உதடுகள்போன வழியசையவிடல், நரம்புகளை அடக்கமுடியாமை, மேலுதடு வலித்தல், விரைந்து மொழிதல் முதலியவைகளாலாகும்.

அசைகளை நன்றாய்ச் சொல்லவேண்டும். ஓசையைத் துள்ளவிடாது அடக்கியாளவேண்டும். ஒரு இசை முறையினின்றும் மற்றொரு இசைமுறைக்குப் பேசுவோன்செல்லலுமுரித்தே. ஏனெனில் அவனது கருத்தை அவ்விசைமுறை காட்டலாலும் கேட்போர்க்கின்பும் அறியுந்தகுதியும் பயத்தலாலுமென்க. அழுத்திச்சொல்லல் சொல்லுந் தொடர்மொழி முடிவின் உண்மைக்கருத்தையுணர்த்தும். இசைநடை குறைத்தல், இசைநடையுயர்த்தல், முன்னிறுத்தல், பின்னிறுத்தல், முன்பின்னிறுத்தல், ஓசையை உயர்த்தல், அதனைக்குறைத்தல், முடுக்காய் மொழிதல் முதலியன வேண்டுழி ஓசையை அழுத்தி ஒலிக்கவேண்டும்.

பேசுங்கால் நிறுத்தும் வயின் நிறுத்திப் பேசுதற்கு ஆற்றல் மிகவேண்டும். இவ்வாறு இடையிடு ஓசை நிறுத்திப்பேசல் அவையோரை மெய்மறந்திருக்கச்செய்யும். ஓசைநின்றபோது உட்லசைவு நிற்கும். சொற்பொழிவுக்கு தெளிவு, விரைவு, கிளர்ச்சி முதலியன மிகவேண்டற்பாலதாம். கிளர்ச்சிசொல்லும் வலியோடும், அவ்வலி மொழிகளுக்கு ஊடுருவி நின்றுஞ் செல்லும்.

மொழிநடையானது பேசுவோன் எந்தத் தொடர்மொழிமுடிவில்ஊக்கமுங் கருத்துமுறப் பேசுகின்றனென்பதைத் தெரிவிக்கும். மெதுவாய்ப் பேசிப்பின் விரைந்தமொழி நடையிற் பேசில் அவ்விரைந்த மொழி நடையிலடங்கிய மொழிகள் ஏற்றமுடையனவென்பதைக்குறித்து நிற்கும். ஒருமொழிநடையினின்று மற்றொரு மொழிநடைக்கு மாறும்போது அழகினைப்பயக்கும். தெளிந்த உணர்வு, அளவை அறிவு, மேம்படுபொருள், ஆழ்ந்தஆராய்ச்சி, பின்னுறுதகிளர்ச்சி, நாவினால் நன்கு நவிலல், கண்டிப்பரத்தல், தோற்றுவாய் முடிவுகாட்டல், ஊக்கி எழுப்பல், தன் கருத்திணங்குறச்செய்தல் முதலியன சொல்லாற்றலுக்குண்டு. இவ்வாற்றல் உடல்நிலைக்குத் தக்கவாறு நிகழும்.

சொற்பொழியுந் திறன் ஒருவனுக் குறுமேல் மற்றவை அவன் வருந்தாது பொருந்திவிடும். கல்வி மிகுதியும், அசைக்கமுடியாக்கருத்துப், மொழிவளமும் ஒருவனுக்கமைந்திருந்தபோதினும் சொற்பொழியும் வலிமையொன்றிலதேல் அவன் அவைச்சிறப்படையான். அளந்த அளவில் நடைபெறும் சொற்பொழிவு மேற்பேசுதற்குரியமொழிகளை இழுத்தற்கும், தெரிந்தெடுத்ததற்கும் எற்றதாம்.

சொற்பொழிவாற்றுதற்குப்பதின்மொழிவைத்தல், வரையறைத்தொடர்மொழிமுடிவினைப்படித்துப் பின் பாராதெழுதல், ஒருதொடர்மொழி முடிவினை வேறுமொழி கொண்டு கருத்துப்பிசகாது திருப்பி எழுதல் முதலியவைகளில் நன்குபயிறல் வேண்டும்.

## II. பேசப்பயிலு முறையியல்.

பொருளியல்புகளை எழுதிவைத்துப்படித்தல் பேசப்பயிலுதற்கு மேற்படியாம். ஆனால் அம்முறையைச் சின்னாளில் அறவே விட்டு விடல் வேண்டும். ஏனெனில் அவையோர் அதன்கண் கருத்துச் செலுத்தாது பழக்கப்படவேண்டிய இதழ்கள் எத்தனையிருக்கின்றன வென்பதை எண்ணி முயலுவார்களேயன்றிப் பயன் நன்கு பெறார்கள். சிலர் இம்முறையுங் கொள்ளற்பாலதென்பர்.

பேசப்பயிலுவோன் பேசும் பொருளியல்பைத் தன்னுள் முறைவழியின் வைத்துக்கொள்ள நன்கு பழகல் வேண்டும். அத்துணை ஆற்றலுறுதற்கு அமைக்கப்பெற்றுள்ள பற்பலசிறுகழகங்களிற் பயின்று கொள்ளல் நலம். ஏனெனில் அறையிலாடிப்பின் அவையிலாடுதல் சால்புடைக்காம். முயற்சி ஆக்கத்தினையாக்கும். பயிற்சி தகைமை தரும். அஃது உறுதிப்பாட்டினை நிறுத்தும்.

உடல்நடுங்கல், வாய்குழறல், அவையஞ்சி உட்குதல், தன்கோண்மறத்தல், பொருட்டொடர்பு முறித்தல், தன்கருத்து வெளியிடப் பின்னிடல், திகைத்தல், துணைதேடல், மற்றொன்று விரித்தல், வெற்றெனத்தொடுத்தல், அவையினர் வெறிய மயலல், வெசாறல், நாணல், பயங்கொள்ளல், வேர்த்துநிற்றல், சொல் விழுங்கல், உதடுகட்டல், வாய் வலித்தல், கூறியது கூறல், முடிவிடங்காணாதுநிற்றல், நுதலிய பொருண்மறத்தல், அதனைத்தேடல், மயங்கி வீழ்தல் முதலிய இத்தன்மைகள் முதன் முதல் அவைக்கண் பேசமுயலுங்காற் பேசுவோனிடம் பொருந்தி நிகழ்வனவாம். இவைகள், பேசு முயற்சியில் இடைவிடாது செய்யும்பயிற்சியால் நீங்குவனவாம். அங்ஙனம் பயிலில், பேரவைக்கட்சென்று தெளிவு, ஓசை, தன்னுரிமை யென்னும் இவைகளோடுகூடிய பேச்சுப் பேசு மாற்றல் வந்துறும். பேசப்பயிலுமுன், பேச்சிற்குரிய முதற்கருவி தன்னிடத்துள்ளதாயினும் பேச்சினைப்பயில்வோன் தன்னறிவை நம்பி ஓர் அவையிற் பேசத்துணியில் அஃது அவனைத் தடுமாற்றத்தில் வீழ்க்கும்.

சிலர் பேசுதற்குமுன் சிற்சில நூல்களைப் படித்து அவைகளினின்று பெற்ற அறிவு கொண்டு உடனே நன்குபேச முயலுகின்றனர். பேசப்படும்

பொருளின்றன்மை. பேசமுயல்வோன் உட்கரு விக்களத்துள் உறுதிபெறுமையால் அவையோர் அதனைக் கோட்டிற்பின்னிட்டு இறைகொள்ளா திருப்பர். அதுபற்றி அம்முறை விட்டொழிக. பேசமுயல்வோன் அவையோரைமுதற்கண் குழந் தைகளாகவும், அவன் அளவை நூற்றிறன்காட் டிப்பேசுங்கால் மாணவர்களாகவும் முடிவில் தன் கல்வி நிலை முழுதுங் கண்டவர்களாகவும் எண் ணக்கடவன்.

## III பேச்சுமுறையியல்.

பேச்சுளான் பெரிதுமுய்வான். ஆயினும் குற்றங்கள் செறியாது பத்தழகின் நலங்கள் மிகச்செறிந்து நிற்கப்பேசவேண்டும். பிறர்குறை கூறலும் அவை மிஞ்சிநிற்றலுமாகாவாம். ஏனெனில் அவை தனக்கோர் இழிதகைமைதந்து நிற்பனவாம்; அன்றியும் அறிவின் மிக்கார்பலரும்குறைகூறுநிற்பர். தான் முற்றுங்கற்றதாக எண்ணிக் களியாது அவைக்கணுள்ளாரை முற்றுங் கற்றவர்களாக நோக்கிக்கருதுக.

அவைக்கு ஏற்றுங்கு உய்த்துணர்ந்துகூறும் வன்மை இன்றெனின் ஆங்கு அவன் நாவலிமை யாவும் விழலுக்கிறைத்த நீர்போலாம். பேச ஏற்

படுத்திய பொருளை முன்னரே ஒழுங்கு படுத்தி யுணர்ந்துகொண்டு நேரம், இடம், செயல் முதலிய வற்றிற்கு இணங்கத் தெளிந்த மெல்லிய மொழி களால் தான் எண்ணியாங்கு பிறர் உணருமாறு முட்டின்றி மொழிதல்வேண்டும்.

பொருளை ஒழுங்குடன் எண்ணி, பாராதே படித்து ஒப்புவித்தற்கு முயலின் மறதி யூடுருவி நின்று இடர்ப்படுத்தலுடன் தனக்கு வேண்டுழி ஊற்றுகாது சழிந்தொழியும். வேறொன்றை விரித்துக் கூறுமாறு கேட்கில் சொல்லுபாற் றலில் வலிகுன்றியுநிற்கும். அதுபற்றி அம்முறை கைவிடுக. இயற்கைச் சொல்லாற் றலிற்பயின்று ஊற்றின் வாய் நின்று நீர்ஊறுதல் போலவும், ஓர் பறவை பறந்து செல்வதைப்போலவும், தன் கருத் தும் மொழியும் இடையறாதுதொடர்ந்து செல்லு மாறு பேசுக. அங்ஙனம் பேசுவதில்பாய்மாவூர் வானொருவன் அதன் வாய்க்கயிற்றை எவ்வாறு இழுத்து நிறுத்தி நடுநிலையாய் ஓட்டுவானோ அவ் வாறே பேசுவோன் அளவைமுறையிற் பொருளை நிறுத்தித் தான் கொண்ட கொள்கையைப் புக லிற் பெரியதோர் அவையும் சுளுகுவிற்றன்வய முறும்.

தொண்டையாற் பேசுவதினும் மார்பாற்

பேசுதல் மணியோசைபோல நீடித்தொலித்துநிற்கும். பிறர்கேட்கப்பேசுதல், ஓசையையும், அவ்வோசைவழிசொல் மொழியுமுறைமையையும் பொறுத்துநிகழும். ஒருதொடர்மொழிமுடிவின் கடைமொழியை நன்குமொழியாதுவிடில் சொற்பொருள் வேறுபட்டு இடர்ப்படுத்தும். பேசும்போது சொற்களை நினைப்புக்கருவியின் வேகத்திற் கூட்டி நின்று வரையறுத்து உரத்த ஓசையொடுஞ்சொல்லுக. அவ்வாறு சொல்லுந்துணிவு நீண்ட காலப்பயிற்சியால் வந்தெய்தும். அங்ஙனம் பயிற்சியுடையாரும் இடைவிட்டுப்பேசலைக்காண்கின்றும்.

மிகவுரக்கப் பேசுதலும் மிக மெதுவாய்ப் பேசுதலும் வெறுப்பை விளைத்து நிற்கும். ஆதலால் நடுநிலையான ஓசையிற் பேசுக. அஃது தன் கருத்துத்தொடர்ந்துவருவதற்கும் அவையோர் கருத்தை இழுத்தற்கும் ஏற்றதாம்.

தெளிவு, இன்னோசை, கிளர்ச்சி முதலியநலங்கள் செறிந்துபேசுதற்கும், மயக்கம், வல்லோசை, கோழைத்தன முதலியவற்றோடு பேசுதற்குமுள்ள வேறுபாடு, உயிருள்ள உடலுக்கும் உயிரில்லா வுடலுக்குமுள்ளவேறு பாட்டினை ஒத்ததாம்.

பேசுங்கால் நிகழுங் கையடையாளங்கள் பேசுவோன் கருத்தையுணர்த்தும் வெளிக்குறிப்புகளேயாம். அவை பேச்சுக்கு ஆற்றலையும், ஊக்கத்தையும், அழகையும் தருவனவாம். எம்மட்டில் இக்குறிப்புகளை ஆளப்படவேண்டுமோ அம்மட்டில் ஆளவேண்டும். அவை பேசுவோன் கருத்திலுள்ள உண்மையை, கேட்போருள்ளத்தும் நிலைநிறுத்தத்தக்கனவாயிருத்தல் நலம். அமைதியும், சுறுசுறுப்பும், ஆன்றமொழியும், தெரித்த பொருளுடைய பொறுப்புச் சொல்லும் இக்குறிப்புகளை சிறக்கச்செய்வனவாம்.

பின்வாங்கலும், மீண்டுவரலும், கைகளை உயர்த்துதலும், சுற்றலும், விரல்களை உயர்த்திக்காட்டலும், நீட்டிச்சுட்டலும், அவைகளைப்பின்னலும், ஓங்கி நாற்காலிமேல் அறைதலும், ஒரு பொருளைக் கையிற்றூக்கிக்கொள்ளலும், பின்னதனைக் கீழே விடலும், அதனைப்பார்த்தலும். தலைகுனிந்து பேசலும் கூடாவாம். ஆனால் சிற்சிலவமையங்களில் முழங்கையை மடக்கி முன்னீட்டலும் அவையோரைக் கேள்விகேட்குங்கால் உள்ளங்கையை ஒருபுறமாய்க் கொஞ்சமுயர்த்தி நீட்டலும் வேண்டற்பாலதாம்.

உண்மையும் மென்மையுமார்ந்த இயற்கைமொழிகளும், பிறரைத்தாக்குதலின்மை, ஊக்கம்,

சுறுசுறுப்பு முதலியன வாய்ந்த மொழிகளும் உள்ளவன் ஏவனே அவன் மேலான சொல்வன்மை யுடையவனும்.

தான் எடுத்துக்கொண்ட பொருளின் விரி வுகளை எல்லாம் அன்றே முடித்துவிட வேண்டு மென்று எண்ணல் தகாது. ஆண்டைக் கேற்ப வேண்டுவன சுருங்கச்சொல்லி முடித்தல் நலம். மறைபொருள், அறியாமை சார்ந்த மொழிகளைப் பேணுது விடுக.

ஒருபொருளுக்குரிய சார்புகள்யாவும்ஒழுங் குபட உள்ளக்கிளர்ச்சியோடு ஒருங்கே மொழியப் படில் அவையோர்க்கு அது வியப்பினை விளைவிக் து நிற்பதுமன்றி பேசுவோன் கருத்துக்குந் துணை புரிந்து நிற்பதாகும்.

ஊர்வழிச்செல்வான் ஒருவனுக்கு வளைந்த ஒற்றையடித்தடத்தைக் காட்டுவதினும் பெரிய தோர் வழியினைக்காட்டல் மேம்பாடுடைத்தாதல் போல, வினுமொழி, ஐயமொழி முதலியவைகளை நீக்கி ஆற்றொழுக்காய்ப் பேசல்நலமாம்

பேசுமாறு கொடுத்த பொருளினை மாத்தி ரம் ஐயந்திரிவறத் தெளிவாய்ச் சொல்லத் துணித லன்றி வேறு ஆண்டைக்குவேண்டாத பொருளி

ளை விரித்து மொழிந்துநேரம்போக்க முயலல்இழி தகைமைதரும்.

ஒருமுறையினை உயர்த்தல் படுத்தல் பொருந்தும் மொழித் தொடர்புகளால் மொழிதல், கேட்போர் உள்ளத்திற் பொருளினை நன்கு நிலைநாட்டும். பேசுவோன் ஆன்ற அறிவுடையவனயிருந்தபோதினும், நூல், கிழி, முதலியன எழுதுவோர் எழுதும்பொருளை மதித்துப் பின் எழுதுமாப்போலப் பேசும் பொருண்முறையை உணர்ந்து நினைப்பிடை வைத்துக்கொள்ள வேண்டும். அங்ஙனம் வைத்துச்சொல்லில் நவின்றோர்க்கு இனிமைபுணர்த்தும். இறையிடத்திடுபட்டார்க்கு அவ்வகை முன் முயற்சிகள் வேண்டா.

ஆழ்ந்தகருத்தின்றிப்பேசுவதினும் ஊமையாயிருத்தல் நலம். பேசவேண்டிய பொருளினை முறைப்படுத்தித்தன்னந்தனியனயிருந்துகொண்டு சொல்லிப்பயிலுதல் நலம். அவ்வாறு பயிலிற் பொருளினையறிதலோடு சொல்லாற்றலையும் எய்துகிறன். ஒருத்தரம் பேசுமுன் இருதரம்நினைத்தல் நலம். படபடப்புக்கொள்ளாது அமைந்து நின்று பேசலும் சிரிப்பாரைப் பார்க்காது முயற்சியில் ஊன்றிநிற்றலும் நெஞ்சின் உரத்தைக்காட்டும்.

நன்கு வற்புறுத்திச் சொல்லவேண்டியது ஒன்றுண்டேல், அதனைப் பலவேறு மொழிகளாற் பற்பலவமையங்களிற் குறிப்பிட்டுக் கூறல்வேண்டுமே தவிர, முன்சொன்ன பொருட்டொகுதிகளையே திரும்பத் திரும்பச் சொல்ல முயலல் அவையோர் உள்ளக்கிளர்ச்சியைக் கீழ்ப்படுத்தி நிற்கும்.

பேசுங்கால் தன்னறிவுமுதிர்ச்சி விளங்குமாறு எண்முறை வைத்து அமையத்துக்கேற்ற தெளிந்தமொழிகளாற் பேசிக்கேட்போர் உள்ளத்தைக்கவர்தல்நலம். சிறியதோர் ஆடியுள்பெரியதோர் பனை காட்டல்போல் ஓசையுடைய ஆணிமொழிகளாற் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தல் கருப்பொருள்காட்டக் கூடியதாயிருக்கும். ஒரு பறவை தன் சிறகுகளை அடித்துக்கொண்டு நடுநிலைமுறையிற் பறந்து செல்லல் போலப்பேசுவோனுஞ் செல்லவேண்டுமே தவிர, இடி இடித்தாற் போலப்பேசித் திடீரென்று நடுவில் நிறுத்திவிடலாகாது. அவ்வாறு நிறுத்தாமை இயற்கையறிவின் நிலைகாட்டும்.

ஒரு பொருளின் பொதுமுறை விரித்துக் கூறியபின் சிறப்பியல் காட்டவேண்டும். அது இப்பியைக்காட்டிப் பின் முத்தினைக்காட்டல்போலாம்.

அவையோர்களிற் சிலர் கேட்பதில் ஆவலின்றி யிருப்பரேல் அவர் தொடர்புற்றன சிற்சில பேசில் ஆவலுடையராகிறர். தன்றன்மையறியாக்கழகத்தில் தன் பேச்சு ஏறுதிருப்பின் தீப்பொறிகள்போன்ற வார்த்தைகளைக் கொண்டுமேற்கோள்காட்டிச் சுறுசுறுப்பாய் மொழியில் அவர் பேசும் வார்த்தைகளைக் கேட்குனராவர். அவையோர் தன் பேச்சைக்குறித்து நின்று கருதவேண்டுமென்று வேண்டுகோள் செய்யலாகாது.

பேசும்போது வெளியிலுறு செயல்களைக் கருதாது நின்றநிலையினின்றே பேசவேண்டும்.



இசைபாடுதல்போலப் பேசாது மெல்லிய ஓசையாற் கேட்போர் உள்ளங்கரைந்து கண்ணீர் பெருகிபோடுமாறு பேசுக. ஓசை நயங் காட்டல், ஒருமுறைபற்றி தெளிவானசொல்வாற்றல்கொண்டு மொழிதல், உட்கருப்பொருளுரைத்தல், அன்பு செலுத்தல், நினைத்தாங்கு பேசல், கடைமொழி விழுங்காது பேசல், அளவைத் திறன்காட்டல், நன்மொழிபொருத்திக்காட்டல், ஐயமொழி விலக்கல், அழுத்திக்கூறல், உறுதி தோற்றுவித்தல், பணிவுகாட்டல், புதுமைப் பொருள்புகலல், ஏற்புழிக்கோடல், அணிந்துணைகொள்ளல், பேச்சின் பயனுறச்செய்தல், அறுதியிட்டறைதல், கொண்டு

கூட்டி மொழிதல் என்பனபோன்ற பல கலங்க ளுந் செறிந்து நிலவ உள்ளக்கிளர்ச்சியோடுரைத் தல்வேண்டும்.

பேச்சிற்குயிராகிய ஒப்புமையணி முதலிய அணிகலங்கள் பொருந்தவுரைக்கில் யாவருக்கும் இன்பம் பயிப்பிக்கும். அவை அவையோர்கருத் துக்கேற்றனவற்றையும் ஏற்றித்திரும்பத்திரும்ப நினைக்குமாறு செய்வனவாம்.

சுருங்கச்சொல்லில் உயர்தரப் படிப்பாளி யின் பேச்சு அழகழகான மொழிகள் செறிந்த தாய் அடுத்ததுகாட்டும் ஆடிபோல் இனிது விளக் கித் திட்பநுட்பம் சிறந்து நிலவும். அன்றியும் இரும்பைக்காந்த மிழுத்தாற்போல் இயைந்துநின் று இழுத்தல்வேண்டும்.

## IV. பேசுவோனியல்.

நினைப்பாற்றல், பயிற்சி, பொருளுணர்ச்சி, தேர்ச்சிமுதலியவற்றையுடையவன் நன்னாவலனாம். இவன் தன்கருத்துக்களை நன்குபுலப்படுத்துவானாதலினால் இவனது சொற்பொழிவே யாவருங் கேட்குந்தகுதியுடையதாம். அவன்பேசும் பொருட்கு அவனே பொறுப்புடையவனாவன். அவன் பேச்சும் மேலான நன்மை விளைவிக்குமாற்றல் பொருந்தி நிகழும். கற்க முடியாத இறையறிவும் அவன்பாற்படும். நிற்க,

செந்தமிழ்ப்புலவர் செய்யுள் செய்வோர், பொருள்விரிப்போர், பிறர்கோண்மறுப்போர், வீட்டு நெறியுரைப்போரென நாற்றிறத்தினராவர் இவருள்

சொற்பொழிவோன் உண்மை நெறியுரைப்போனாவன். அன்றியுமிவன், வழி, வரவு, பொருள், மேற்கோள் முதலியன எடுத்துக் கூறிப்பிறன் கோண்மறுத்துத் தன்கோள் நிறுவுவோனுமாவன். ஒரு பெருங்கூட்டம், பெரியதோர் வழக்கு முறையில் இவன்பேசலால் தன்பாலொன்றிநிற்கு மாறுசெய்யு மாற்றலுடையவனே பேசுதற்குரியவனாவன். பேச்சுக்குரிய கருவிகள் இயற்கையில் நன்கமைந்திருத்தல் நலம். அல்லாவிடில் மருந்துகளாற் சீர்செய்தல்வேண்டும்.

ஒழுக்கம் விழுப்பந்தருமாதலால் அதனை உயிரினும் ஓம்பிக்கொள்பவன் மேம்படு பேச்சாளியாம். அவனே மக்கட்பிறவியினுட்படுபவனும். அவனே பிறரைக்கவர்பவனும். நன்னடையுடையவனே நல்லெண்ணமுடையவனும். இவன் சிற்சிலமொழிவதில் தவறினும் அவையோர் கருதாது விடுப்பர். தான்பேசியதற்கு மாறாய் நடப்பவன் நன்கு மதிக்கப்படான்.

சிறுகிய செலவிற் பெரும்பயன் பலிப்பிக்குமாப்போல, சுருங்கிய சொல்லாற்கேட்போரைப் பெரியதோர் நலத்துட்புகுத்திவிடலாம். அவையில் தான் சொன்னவற்றிற்கு யாரேனும் மறுதலை பேசில், அதுதான் அமையாதென்றுகண்டு அவை

யோரறியுமாறு அளவைத்திறன் கொண்டு பேசி எதிர் தோல்வியடையுமாறு செய்க. அங்ஙனமாயின் அவையோர் நன்கும் மதிப்பார்கள்.

தான் எண்ணியதைச் சொல்ல முடியாமலும் முன் சொன்னதை மீண்டுந் தெரிய முடியாமலு மிருப்பின் அவையோர் குற்றங்காண்பர். ஆகை யால் இயற்கை நல்லறிவு கொண்டு இயம்புக.

பேசப்புகுமுன் அவை எங்கு எவ்வாறு யாவரால் நடத்தப்பெறுமென்பதையும், ஆங்குப் பேசுவோர் யார் யார் என்பதையும், எவ்வெப்பொ ருள்கள் பேசப்பெறும் என்பதையும் நன்கறிந்து கொள்ளவேண்டும்.

பேசுவோன் சிறுகியபாவால் தெய்வம் வழி பட்டு சுருங்கிய அவையடக்கங்கூறி நேர வரை யறை கடவாது களிப்புங் கிளர்ச்சியுங் கொண்டு பேசவேண்டும். நேரவெல்லைகடந்து பேசில் பின் பேசவருவோர் ஒழுங்குபடுத்தி வைத்திருந்த பொருளறிவு தலைதடுமாறிப்போம். அதுபற்றி அவர்கள் ஊக்கமுங்கெட்டு மீண்டுமோர் அவைக் குச் செல்லும் விருப்பமுமில்லாதுவர்.

புன்னர்ப்பேசுவோன் உரத்துப் பேசினனா கில்பின்பேசுவோனும் அவ்வாறேபேசுக. அல்லுழி அவையோர்க்கு நற்பொருளுங் குறைந்துகாட்டும்.

ஒருமொழி வெல்லும்; மறுமொழி கொல்லும். ஆதலால் ஒருவருக்கும் தீங்கினை உண்ணாது ஆன்ற மொழிகளையே ஆண்டு கொண்டு பேசுக. அஃது பல நலம் தரும். அம்மொழிகொண்டு பேசுதல், ஒழுக்கம், உறுதி, தேர்ச்சி முதலியவைகளைக் காட்டும்.

தானொரு மேற்கோள் காட்டவேண்டில் அமையத்திற்கேற்ற தொன்றை எடுத்துக் கூறுக. ஒருபொருளை உயர்த்திக்காட்டவேண்டுமேல்மேற்கோளும் உயர்ந்தபொருள்கொண்டதாயும், தாழ்த்திக்காட்டவேண்டுமேல் மேற்கோள் தாழ்ந்தபொருள் கொண்டதாயு மிருத்தல் நலம்.

அவையில் எவரையுந் தாழ்த்திப் பேசலாகாது. (ஏனெனில் அது அவர்க்குச்சினம்), இழிவு முதலியவற்றை யுண்டாக்கும். உயர்த்திப் பேசவேண்டுமேல் தனக்கு ஒப்பு உயர்வு உள்ளாரைக் குறித்துப்பேசுக. அல்லாக்கால் ஒருவரையும் புகழ்ந்தேனும் இகழ்ந்தேனும் பேசற்க. புகழ்ச்சி உவப்பினு முவப்பிக்கும். இகழ்ச்சி கணைபோல நெஞ்சினுள் ஊடுருவிப்பாயும், அவையினுட் சிறுபாலர்க்கு மாத்திரம் நெஞ்சுநோவு ண்டுபண்ணுபவன் உயர்தரப்பேச்சாளியாம்.

பேசுவோன் யான் என்ற செருக்குடனில்லாது தாழ்வெனுந்தன்மைகொண்டு, நிற்குந்தோற்றத்தாலும் சொல்லும் மொழியாலும் அவையோரைத் தன் மாட்டிழுத்தல் வேண்டும்.

பேசுவோரிற் சிலர் ஒருவனுக்குச் சொல்லும் வன்மையிலராகி ஒரு பேரவைக்குச் சொல்லும் தகுதியுடையராயிருப்பர். சிலர் இதற்குமாறும் நிலைகொள்வர்.

நீரோடுங்காலொன்றைப் பலபிரிவுகளாய்ச் செய்யில் நீர்விரைந்தும் ஆழ்ந்து மோடாதாம். அதுபோல பேசுவோன் தன்னறிவைப் பலவாறு செலுத்தில் ஊக்கமுங் கிளர்ச்சியுங் குறைந்துகாட்டும். ஆதலால் அங்ஙனம் செலுத்தாதொழிக.

பேசுந்தன்மையில் மிகத் தேர்ந்தவர்கள் எப்பொருளையும் எந்த வேளையிலும் புதிதும் மேன்மையும் பொருந்திய கருத்துக் களுடன் எளிய நடையில் மொழியுமாற்றலுடையவர்களாயிருக்கிறார்கள்; சிலர்க்குச்சொல்லுந் தகுதியிருந்தும் துணிவுகொள்ளவில்லை. வேறு சிலர்க்குப் பேச்சால்ப் பிறரைக் கவருமாற்றலில்லை.

தகுதியற்ற ஒரு பொருளை நிலைநாட்டுமாறு பெரியதோர் ஆற்றலோடு பேசுவானாகில் அப்பேச்சு கேட்போரை கீழே வீழ்த்திவிடும்.

பேசுவோன் கேட்போர்செல்லாம் அருகி லிருக்கும்படியான விடத்தில் நின்று மொழியில் அப்பேச்சின்பயன் அவைபோரைக் கிட்டி அவர் களை ஊக்கி எழுப்பி நிற்கும். தூரத்தில் நிற்கில் அப்பேச்சு பயன் பயப்பியாது. பேசுவோன் தான் நிற்கும் நிலைக்குச் சுற்றிலுள்ள எல்லாவிடங் களையும் பார்த்தே பேசவேண்டும். அவைபோர் தலைகளுக்கு மேலேயே இவன் பார்வை நிற்க வேண்டும்.

பேசுவோன் உள்ளக்கிடைக்குறிப்பு ஒன்று யிருக்க அவன் மற்றொன்றைச் சுட்டி நின்றும் பேசலாம்.

ஒரு பருந்து வானில் கொஞ்சநேரம் சிற காட்டியும் சிறிது நேரம் சிறகாட்டாமலும் பறந் து செல்லுமாப்போல, பேசுவோனும் முதலில் நடு நிலையில் நின்றும் பின் படபடப்பாய்ப் போதல் நலம். இருளில் மின்வெட்டினாற்போல, பொருள் களை விரித்துக் கூறவேண்டும்.

பேசும்போது பல பாக்களை யெடுத்து மொழிந்து அவைகளின் கண்ணுள்ள மொழிப் பொருள் விரித்துக்கூறிநேரம் போக்கலாகாது. காலந்தப்பிப் பேசலுங்கூடாது. கடையிற்பேசு வோன் சுருங்கப்பேசவேண்டும். அல்லாக்கால்

அவையோர் கலைந்து செல்லுவார்கள். அவைத் தலைவர் பேசி முடித்த பின்னும், பேசலாகாது.

எவரையுங் கவருந்தோற்றம், கேட்டற்குரிய ஓசை, இனிமை, சொல்வன்மை, இழுக்கும்வலி, இயற்கைமொழியாற்றல், அவையறிவு அறியுமாற்றல், அளவைத்திறன் பொருந்திநிற்றல், அறிவுநிறைந்த பொருளுடைமை, தடுமாற்றமின்மை, தெளிவு, உறுதிவரையறைக் கருத்துடைமை முதலிய தன்மைகள் பேசுவோனிடம் நன்குபொருந்தி நிலவ வேண்டும்.

இவைகளையொத்த பலமுறைகளைப் பேசுவோர் பெரிதுங்கருதுவாராக.

## V. பேசும்பொருளியல்.

பேசும்பொருள் மக்கட் பிறப்பிற் பிறந்தானொருவன் அடையவேண்டுவனவாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினுள் ஒன்றைப் பற்றியே இருத்தல்வேண்டும். அவையோர் விருப்பமுறும் பொருளினைப் பேசல் நலம். அல்லது தான் முன்னரே தெரிவித்து நின்ற பொருளினைபபற்றிப்பேசல் நலம் அப்பொருளையும் வேண்டிய அளவுதான் கூறல்வேண்டும். ஏனெனில் அதிகப்பட்டால் இனிமை தங்கிய அருமருந்தும் நஞ்சாமென்க.

## VI. அவையோர் நிலையியல்.

பேசுவோனுக்கு அவையோர் நெஞ்சமே நிலமாம். அவன் சொல்லுங்கருத்தே விதையாம். அவன் இனிமை சார்ந்த மொழியே நன்னீராம். நெஞ்சினுட் பலிக்கும் பயனே கனியாம். அக்கனியருந்துபவன் பறவையாம்.

அவையோர் பெரும்பாலும் கற்றவர்களாகவேயிருத்தல்வேண்டும். ஏனெனில் அவர்கள் தான் பேச்சின்வழியே பின்பற்றிச்செல்லத்தக்கவர்கள். பேசுவோன் பேச்சினை அவையோர் நன்குகருதிக் கேட்கவேண்டும். அல்லாக்கால் பொருள்முடிவு குறைந்துகாட்டும். அவையோர்

நன்கு கேட்கும்வரை பேச்சும் விரைந்து செல்லாது. நன்றாகப்பேசும்போது அவையோர் தூங்கலாகாது. சிரித்தல்முதலிய தீக்குணங்கள்பொருந்தா திருக்கவேண்டும். பேச்சினைக்கேட்டு முடிந்தவுடன் அவையோர்நிலை முன்னிருந்த நிலையினும் மாறுதலுடையதா யிருக்கும். தெளிந்த உள்ளக்கிளர்ச்சியும் அவர்களுக்கெழும். கல்வியறிவுற்ற பல சொற்பொழிவினைக் கேட்டோர் உயர்தரக் கல்வியாளராகின்றனர்.

## VII. பேச்சின் பயனியல்.

செயல்கள் யாவும் பயன்றருமாப்போல் பேச்சும் பயன்றரும். நன்மை விதைக்கில் நன்மை விளையும். தின்மை விதைக்கில் தின்மை விளையும். உண்மையுந் தகுதியுஞ்செறிந்த நன்னோக்குடன் பேசில் பயனும் அவ்வாறே உறும். பொருளினை அளவும் ஒழுங்குமார்ந்த முறையில் விளக்கி நிற்கிற் தன்மையே பயன் பயத்தற்குக் கருவியாம்.

ஓர் உண்மையினை நிலைநாட்டவேண்டியதற்காகப் பேச்சு ஏற்பட்டிருக்கின்றது. ஆதலால் யாண்டும்மறைந்தபொருள்கொண்டுபேசலாகாது.

சிலர் அங்ஙனஞ் செய்யாது நீண்ட நேரம் தங்கள் முடிவிடங்காட்டாது நின்றுபேசியாவருந் திகைக்குமாறு திடீரெனத்தங்கள் கருத்தை வெளியிடுகின்றார்கள். இஃது கேட்போரை மால்கொள்ளச்செய்வதன்றி பயன் பயப்பியாதொழியும். ஏனெனில்வியப்புத் திகைப்பையும், திகைப்பு அலைமலைவையுங் கொடுத்து நெஞ்சுறுதிநிலையை நீக்கி நிற்கும்.

பயனுறுப்பேச்சுப்பேசுவதினும் பேசாதிருந்துவிடல் நலம்

## VIII. பேசுநேரவியல்.

எவ்வவையும் ஐந்து நாழிகை நேரத்துக்கு மேற்படாமல் நடத்தப்படலாம். அவையோர் விரும்பில் கொஞ்சநேரம் நீட்டிக் கொள்ளலாம். பேசுமுன் நேரவரையறையை அவைத்தலைவரிட மறிந்து கொள்ளல்வேண்டும். அவையோர் பேசுவோர் நிலைமைகொண்டு நேரமதித்து ஏற்படுத்த வேண்டும். களுஹூ நாழிகைக்கு மேற் பேசுவோன் ஒருபொருள்பற்றிப் பேசமுடியாதென்று உயர்தரப் பேச்சாளிகள் உரைக்கின்றார்கள். ஒரு பொருள் பற்றிப்பேசுமாறு இரண்டரை (உ இ) நாழிகை நேரங்கொடுக்கில் கடையிலுள்ள

இனு) நாழிகை பேசுவோன் கேட்போர் யாவருக்கும் வறிதே கழிந்தொழியும். ஏனெனில் அந்நேரத்திற்குள்ளேயே தான் முன்னறிந்து வைத்திருந்த பொருளினறிவுகளை அறவுங் குறைந்து காட்டுகின்றன. நேரங்கழிவதெல்லாம் பிறரைப் புகழ்ந்து பேசுவதிலும் மற்றொன்று விரித்தலிலேயுமாம். பேசுவோர் அவையோர் நேரத்தை வீணாக்காமல் குறித்த நேரத்தில் வந்திருத்தல் வேண்டும். பேசுவோனொருவன் பேசத்தொடங்கும் நேரங்கழித்துவரில் அவையோர் யாவருக்கும் அந்நேரம் பயனின்றிப்போம். அவர் அந்நேரத்துட் செய்யற்பாலது பலவாம். கேட்போர்பேசும் பொருளினைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்குமாறு நேரந்தாழ்த்து நிற்கலாகாது. சுருங்கச்சொல்லில் எடுத்தபொருளுண்மைகளைக்குறித்தநேரத்துள் முடித்துக் காட்டலே மேலான பேச்சாளியின் கடனாம்.

நேரமே எவற்றையும் நடத்துங் கருவியாதலால் அதனை எவ்வாற்றானும் ஓம்புக.

## IX. பிறன்கோண்மறுப்பியல்.

பேச்சுப்பேசுதற்கும் பிறன்கோண் மறுத்தற்கும் வேறுபாடுமிகவுண்டு. ஒருவன் தன்கோளுக்கு மறுதலைகொண்ட கோள்கையுடைய மற்றொருவனை மறுத்துத் தன்கோள் நிறுவமுயல்வதே பிறன்கோண் மறுப்பாம்.

பொருட்டொகுதிகளை ஒழுங்கு முறை வைத்துப் பேசுமாற்றலும் உண்மையுமுடையவரோடு இம்மறுப்பு முறை செய்யத்தக்கதாம். பேசும்பொருள் என்ன? பேசுவோர் தொகையென்ன? நேரவரையறை என்ன? என்பதைக் கருதியே பேசல்வேண்டும். இவ்வகை அவையில்

ஒவ்வொருவரும் (உஇ) இரண்டரை நாழிகையில் ஆறிலொருபங்குத் நாழிகைக்குமேற் பேசலாகாது. அவையோர் நிலைமை எண்ணம் முதலியவற்றை யும், தன்னைமறுத்தோரையும், மறுப்பின்றன்மை யையும், சொன்னபதிலையுங் கருதியே சொல்ல வேண்டும்.

## X. அவைத்தலைவரியல்.

முதன் முதல் அவைத்தலைவர் பேசத்தொடங்கும்போது அவையிற் பேசப்படவேண்டிய பொருள்கள், பேசுவோர்தொகை, ஒவ்வொருவருக்கும் பேசக்குறிப்பிட்டிருக்கிறநேரம் முதலியவற்றையறிந்துகொள்ளவேண்டும். அவையோர்க்கும் அப்போதைக்கப்போது வேண்டியவற்றைத் தெரிவிக்கவேண்டும். அவை ஒழுங்காய்நடைபெறுகிறதாவென்பதைக் கருதவேண்டும். பேச்சுநடந்துகொண்டிருக்கும்போது பேசுவோனைப்பார்த்தல்கூடாது. ஊடே உரத்துப்பேசி அவன் எண்ணத்தைக்கலைத்தலாகாது. ஏனெனில் தன்பேச்சு

ஆண்டுப் பொருத்தமுடையதல்லவோ வென்னக் கவனுவான். பேசுவோனுக்கு அளித்தநேரம் ஆய் விடுமுன் பேசுவோன் முடித்தற்கு இவ்வளவு நேரந்தானிருக்கிறதென்று தெரிவித்தல் நலம். நேரங்கடந்து செல்ல இடங்கொடுத்தலாகாது. எனெனில் அவையோர்க்குச் சடைவுண்டாம். அவையோரையும் ஒழுங்குமுறை நிறுத்தல் அவைத் தலைவர் கடனும்.

பேச்சுயாவும் முடிந்தபின் அவைத்தலைவர் முடிவுரைகூறி வாழ்த்தளித்தல் வேண்டும். பின் அவைத்தலைவருக்கும் அவையோருக்கும் அவை நடத்துவான் புகழ் கூறிப் போற்றல் வேண்டும். அவைமீண்டுங்கூடுநேரம் சொல்லவேண்டும்.

## XI. முடிபியல்

(I) பேசுவோன் தங்குமிடம்-தூய்மையாயும் மரங்கள் சூழ்ந்த பொழிலுடையதாயும் நீர்நிலைகளமைந்ததாயுமிருத்தல் நலம் (2) உடல்-தூயதாயிருத்தலோடு உள்ளாடையுடன் மேல் வெள்ளாடையாலணியப்படவேண்டும். மெய்ப்பை தலைப்பாகையுடனிருத்தல்நலம். (3) வாய்-கொன்னல் முதலியன கொள்ளாது பேசும்பொருளைத் தனியே யிருந்து சொல்லிப்பயிறல் வேண்டும். கோழைகளைந்து வறட்சியில்லாதிருக்கச் செய்ய வேண்டும். (4) கண்-கண்ணாடி வேண்டில் அதனால் அணியப்படவேண்டும். அவையோர் தலை

களின்மேற் பாந்துநின்று எப்பக்கமும் பார்க்க வேண்டும் (5) மூக்கு-சளியின்றி நற்கந்தமுகால் வேண்டும் (6) செவி-குடும்பியாலடைப்பில்லாத தாகித் துப்புரவாயிருத்தல்வேண்டும்(7)நெஞ்சம்-கவலையின்றிப்பேசும் பொருள்களை உள்ளுணர்வால் ஒழுங்குற உணர்தலுடன் கிளர்ச்சியும் ஊக்கமுங்கொண்டு முடிக்கு மாற்றலுடனிருத்தல் வேண்டும் (8) ஊண்-கற்கண்டு, மிளகு, சுக்குமுதலியன கலந்த வெந்நீரோடு மயக்கமில்லா ஊணுமருந்தவேண்டும். (9) நடை-வெயில், மழை,காற்றில் விரைவாய்நடந்துசெல்லாது பேசுமிடத்துக்கு ஊர்தி ஊர்ந்து செல்லவேண்டும். (10) கை- எழுதுகோல் நூல் தான்பேசவேண்டிய பொருட் குறிப்புகள் முதலியவற்றுடனிருத்தல் வேண்டும். (11) கால்- இருமருங்கும் பார்த்துப் பேச்சுமேடைக்குச் செல்லவேண்டும். (12) நண்பு- நட்பாளருடனிருக்கினும் பொருளறிதலைவிட்டுப் பேசிக்கொண்டிருத்தலாகாது. (13)பேசுமிடம்-பலகணிகாற்கருவிவிளக்கு இவைகள் பொருந்தியிருப்பதோடு கல்விபயின்ற பலராலும் குழுமியிருத்தல்வேண்டும். (14) பேசும் மேடை-உயர்ந்ததாயும் நாற்காற் பலகையுள்ளதாயும் சிறு விளக்குள்ளதாயுமிருத்தல் நலம் (15) பேசுவோன்-சுருங்கிய பாவால்தெய்வம் வழி

பட்டுச்சிறுகியஅவையடக்கங்கூறவேண்டும். எடுத்தபொருளைப்பொது நோக்காற் சுருங்கக்கூறிப் பின் னதனை விரித்து இனியமெல்லோசையுடன் கூடிய மொழித்தொடர்புகளால் அளவைத்திறன் காட்டிக் கேட்போருள்ளங் கவருமாறு பேச வேண்டும். நினைக்குமாறு பேசிற்பயன்பயக்கும். அன்புங்கிளர்ச்சியுமுறல் வேண்டும். ஒன்றை முடித்தபின் அதிக நேரம் இடைநிறுத்தாது மற்றொன்றினைப்பேசுக. நிறுத்தலும் தொனிமாற்றலும் அளவோடு மொழிதலும் அழகினைப்பயந்து கேட்போர் உள்ளத்தையிழுக்கும் கேட்போர் கருத்தை அடிக்கடி உணர்ந்து அழுத்திச்சொல்ல வேண்டியவைகளை இருமுறை கூறுக. பத்துக் குற்றங்கள் பொருந்தாது சொல்லாற்றல், பொருளாற்றல், காலவரையறை முதலியவற்றைக் கருதிப்பேசவேண்டும்(16) அவையோர்- சிரித்தல், உரக்கப்பேசல் முதலிய தீக்குணங்களின்றி ஒழுங்கான முறையிலிருக்கவேண்டும். (17) அவைத்தலைவர்- கற்றவராய்வீற்றிருந்து குறிந்தகாலத்துள் அவையைமுறையாய் நடத்தி யாவரும்வியக்குமாறு முடிவுரை கூறுக (18) அவைநடத்துவோன் யாவருக்கும் வாழி கூறிப்போற்றுக.

நூல் முற்றிற்று

## அருஞ்சொல் விளக்க அட்டவணை.

### I. பொதுவியல்.

| | |
|---|---|
| மக்கட்பிறப்பு. | = மானுட ஜென்மம். |
| யாக்கை. | = சரீரம், தேகம். |
| பொறி. | = இயந்திரம். |
| புறவுடல். | = ஸ்தூலதேகம். |
| உள்ளுடல். | = சூக்ஷ்மதேகம். |
| முதலுடல் | = இலிங்கதேகம். |
| முதலிடம். | = மாயை. |
| தோன்றி இருந்து ஒடுங்கும். | = சிருஷ்டி, திதி, ஸம்ஹாரப்படும். |

| | |
|---|---|
| முதனிலை. | = மூலாதாரம். |
| குழி. | = குண்டம். |
| உதிரப்பை. | = இரத்தாசயம். |
| உடன்முப்பிணி. | = வாதம், பித்தம், சிலேஷ்டுமம். |
| உந்திக்கால். | = உதானனென்னும்வாயு. |
| காற்று. | = வாயு. |
| நாணிகள். | = தந்திகள். |
| ஐம்பொறிகள். | = பஞ்சேந்திரியங்கள். |
| ஐம்புலன்கள். | = பஞ்சதன்மாத்திரைகள். |
| வலி. | = திடம். |
| நினைப்புக்கருவி. | = மனம். |
| மெய். | = தேகம். |
| ஊழ். | = கன்மம் |
| கருவிகள். | = தத்துவங்கள், காரணங்கள், சாதநங்கள். |
| உயிர். | = ஆன்மா. |
| அறிவு, நசை, செயல் | = ஞானம், இச்சை, கிரியை. |
| யாறு. | = நதி |
| பொருள். | = பதார்த்தம், விஷயம். |
| ஒலி. | = நாதம். |
| ஐம்பெருநிலையிபற்பொருள். | = பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம். |
| வானம். | = ஆகாயம். |

| | |
|---|---|
| ஓசை. | = சப்தம். |
| சொல்லொலி. | = வாக்கு. |
| ஒலிமுதல்வழி. | = நாதமூலகாரணம். |
| முதனிலையொலி. | = சூக்குமை வாக்கு. |
| மார்பொலி. | = பைசந்தி வாக்கு. |
| கழுத்தொலி. | = மத்திமை வாக்கு. |
| வாயொலி. | = வைகரி வாக்கு. |
| முட்டை. | = அண்டம். |
| நிறம். | = வண்ணம். |
| எழுத்துரு. | = அக்ஷர சொரூபம் |
| பொது. | = சாமானியம். |
| ஆயுங்கருவி. | = புத்தி. |
| உயிர்ப்புக்கால். | = பிராணவாயு. |
| கழுத்து. | = கண்டம். |
| பத்துப்பா குடைக் கால். | = தசவாயு |
| உட்கருவிக்களம். | = அந்தக்கரணம். |
| முடிக்குங்கருவி. | = சித்தம். |
| எழுப்புங்கருவி. | = அகங்காரம். |
| உச்சி. | = கபாலமத்திபம். |
| விரற்கடை. | = அங்குலம். |
| மூக்கு | = நாசி. |
| ஆராய்ச்சி. | = விசாரம். |
| எண்ணர். | = தார்க்கீகர். |

| | |
|---|---|
| எண்ணூல். | = தருக்கசாஸ்திரம். |
| கருதலளவை. | = அநுமானம். |
| வழி. | = காரணம். |
| வரவு. | = காரியம். |
| ஏரணம். | = தருக்கம். |
| புலமை. | = ஞானம். |
| அவை. | = சபை. |
| பொருளறிவு. | = கலைஞானம். |
| சொற்பொழிவு. | = பிரசங்கஞ்சொல்லல். |
| முழுநிலை. | = பூரணம். |
| மேற்கோள்நூல். | = இலக்கியம். |
| ஒழுங்கியல்நூல். | = இலக்கணம். |
| அளவைநூல். | = தருக்கம். |
| புலமைநூல். | = சாஸ்திரம். |
| வரலாற்றினூல். | = சரித்திரம். |
| பொறித்தல். | = பதித்தல் |
| வைப்பு. | = கருகூலம். |
| பேச்சவை. | = பிரசங்க சபை. |
| விரிவு. | = விபரம். |
| உயிர்ப்புப்பை | = சுவாசப்பை. |
| உள்ளேஇழுத்தல். | = பூரகம். |
| வெளிவிடல். | = ரேசகம். |
| வயிறு. | = உதரம். |
| நெஞ்சு. | = மனம். |

| | |
|---|---|
| ஒலிநாண். | = நாததந்தி. |
| யாழ் | = வீணை |
| உயிர்க்கிழவன். | = ஆன்மா. |
| காற்றாட்டுங்கருவி. | = சுவாசக்குழாய். |
| களிப்பு. | = சந்தோஷம். |
| மொழி. | = வார்த்தை. |
| நடை. | = கதி. |
| கருத்து. | = கவனம். |
| விரைவு. | = அவசரம். |

## 2-வது இயல்.

| | |
|---|---|
| கழகம். | = சபை. |
| உரிமை. | = சுதந்தரம். |

## 3-வது இயல்.

| | |
|---|---|
| நேரம், இடம், செயல். | = கால, தேச, வர்த்தமானம். |
| பாய்மா. | = அசுவம். |
| சூழ்ச்சி. | = உபாயம். |
| நடுநிலை. | = மத்தியஸ்தம். |
| கோழைத்தனம். | = அதைரியம். |
| கையடையாளம். | = சமிக்கை. |
| ஐயம். | = சந்தேகம். |
| திரிபு. | = விபரீதம். |
| கிழி. | = சித்திரப்படம். |

| | |
|---|---|
| மதித்தல். | = நிதானித்தல். |
| ஊமை. | = மூகை. |
| நெஞ்சினூரம். | = மனோதைரியம். |
| சிறப்பு. | = அசாதாரணம். |
| ஆவல். | = அபேக்ஷை. |
| மேற்கோள். | = திருஷ்டாந்தம். |
| ஒப்புமையணி. | = உவமாலங்காரம். |

## 4–வது இயல்.

| | |
|---|---|
| நாவலன். | = பிரசங்கி. |
| செய்யுள்செய்வோன். | = கவி. |
| பொருள்விரிப்போன். | கமகன். |
| பிறர்கோண்மறுப்போன். | = வாதி. |
| வீட்டுநெறியுரைப்போன். | = வாக்கி |
| வழக்குமுறை. | = வசனக்கிரமம். |
| துணிவு. | = திடம். |

## 5-வது இயல்.

| | |
|---|---|
| அறம் | = தருமம் |
| பொருள். | = அர்த்தம். |
| இன்பம். | = காமம். |
| வீடு. | = மோக்ஷம். |

## 6-வது இயல்

அருமருந்து. = அமிர்தம்.
பொருண்முடிவு. = தீர்ப்பரியம்.

## 7-வது இயல்

பயன். = பிரயோஜனம்.

## 8-வது இயல்

நாழிகை. = கடிகை.
நேரவரையறை. = காலப்பிரமாணம்.

## 9-வது இயல்

பிறன்கோண் மறுப்பு. = வாதம்.
பதில். = உத்தரம்.

## 10-வதுஇயல்

அவைத்தலைவர். = அக்கிராசனுதிபதி.

## 11-வதுஇயல்

தூய்மை. = பரிசுத்தம்.
பொழில். = சோலை.
நீர்நிலை. = தடாகம்.
உள்ளாடை. = கௌபீனம்.
மெய்ப்பை. = தேகரக்ஷை
வறட்சி. = காய்வு
ஊர்தி = வாகனம்.
பலகணி. = சாளரம்.
காற்கருவி. = வாய்வு இயந்திரம்.
போற்றுதல். = துதித்தல்.

## இந்நூற்கு வேண்டற்பாலனவான செய்யுட்கள்.

### பத்தழகு.

சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல்
நவின்றோர்க்கினிமை நன்மொழிபுணர்த்தல்
ஓசையுடைமை யாழமுடைத்தாதல்
முறையின் வைப்பே யுலகமலையாமை
விழுமியது பயத்தல் விளங்குதாரணத்த
தாகுதனூலிற் கழகெனும்பத்தே.

### பத்துக்குற்றம்.

ஈரைங் குற்றமு நேரிதி னுடிற்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
குன்றக்கூறன் மிகைபடக் கூறல்
பொருளில மொழிதன் மயங்கக் கூறல்
கேட்டோர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியா னிழுக்கங் கூறல்
தன்னா னொருபொருள் கருதிக் கூற
லென்ன வகையினு மனங்கோ ளின்மை
யன்ன பிறவு மவற்று விரியாகும்.

### தருக்கம்.

"புத்தி விசாரம் புரிதலே தருக்கம்"

"ஞாயம் பொருந்த மொற்றுமை நெறிப்பட
வாய்ந்தினி துணர்ந்துபி னறைதல் தருக்கம்"

" தருக்கமொழிபொருண் முன்னுதல் தழுவும்."

## நால்வகைப்புலவர்.

கவியேகமகன் வாதி வாக்கியெனப்
புவிமேற் சொல்லும் புலவர் நால்வர்.

ஆசு மதுரஞ் சித்திர மகலம்
பாவகை பாடுவோன் கவியெனப்படுமே.

நிறைந்த கல்வியா னிறைந்த வறிவா
னறைந்த வொருபொரு ளதனை விரிக்க
வல்லவன் கமகன் சொல்லுங் காலை.

எதுவுமேற் கோளு மெடுத்துக் காட்டித்
தன்கோ ணிறீஇப் பிறர்கோண் மறுக்கும்
வன்புடை யோனே வாதி யாவான்.

அறம்பொரு ளின்பம் வீடென நான்குந்
திறம்பா திவரச் செஞ்சொற் கொண்டரு
ளேக்கியுணர்ப்போன் வாக்கி யாவான்.

௰

சிவமயம்.

## அறிவிப்பு.

என்னாலியற்றி வெளியிடப்பட்ட நூல்களாவன:—

1. சித்தாந்தஞானரத்நாவளி முதற்பாகம் 0—2—0.
2. ௸ ௸ இரண்டாம்பாகம் 0—6—0.
3. பஞ்சகிருத்தியம் (இங்கிலீஷ்) ... 0—1—0.
4. சொற்பொழி வாற்றுப்படை ... 0—4—0.

S. பால்வண்ணமுதலியார்,
திருநெல்வேலி.